[23rd March 1961

### *Road repairs*

* 1025 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் நவம்பர் மாத மழையின் காரணமாக எத்தனை மைல் நீளமுள்ள ரோடுகள் சேதமடைந்துள்ளன ?

(இ) அவைகளை மீண்டும் புதுப்பிக்க உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டதா ?

(உ) இதற்கு ம்த்திய சர்க்காரிடம் உதவி கேட்கப்பட்டதா ? விவரமென்ன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) 2,295 miles.

(*b*) Yes, Sir.

(*c*) No, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : இப்போது மழையின் காரணமாக சேதம் அடைந்த ரோடுகளிலே எத்தனை மைல் நீளம் பழுது பார்க்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : உடனடியாக எல்லா ரோடுகளும் பழுது பார்க்கப்பட்டுத்தான் இருக்கிறது. முன் இருந்த நிலைமையைப் போல் இப்பொழுது இல்லை. " ஒரு பேஸ்ட் ப்ரொக்ருமுக்கு " கொண்டு வரமுடியும் என்று சொல்ல விரும்புகிறேன்.

### *Formation of Panchayat Union Council (Students' procession), Madurai*

* 1026 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the officials of the Education Department, Madurai District, recently conducted a students' procession in connection with the formation of the Panchayat Union Councils; and

(*b*) whether any complaint has been lodged by the parents to the Government against this sort of propaganda?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) No complaint was received from any quarter.

### *Liquor permit holders*

* 1027 *Q.*—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of persons who have been given permits to drink alcohol; and

(*b*) the number of persons who have been holding such permits for more than 10 years?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Particulars of the number of persons who have been given permits for personal consumption of bottled foreign liquor or Indian made foreign spirits during the year 1960, i.e., from 1st January to 31st December 1960 under the various categories are as follows :—

(1) The number of Indians permanently residing in this State who have been given annual permits (fresh grant and renewals) on medical grounds, issued, by Government ... ... ... ... ... 1,506

23rd March 1961]

| | |
|---|---|
| (2) The number of temporary residents in the State, i.e., persons who are not citizens of India, who have been given annual permits (issued by the Board of Revenue) ... ... ... ... ... | 1,348 |
| (3) The number of temporary residents and visitors (Indians from other States) who have been given temporary permits by the Board of Revenue. | 366 |
| (4) The number of Army Officers who have been given permits by the Board ... ... ... | 136 |
| (5) The number of distinguished visitors to whom temporary permits have been issued during their visits to this State ... ... ... ... | 1,053 |

(b) Particulars of the number of persons who have been holding such annual liquor permits for more than 10 years could not be complied as the old records are not available at this distance of time.

SRI A. VEDARATHNAM : இந்த பர்மிட்டுகளை அவர்கள் துஷ்பிரயோகம் செய்யாமல் இருப்பதற்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : துஷ்பிரயோகம் செய்தால் இந்தப் பர்மிட் கான்ஸல் செய்யப்படும்.

SRI A. A. RASHEED : Sir, may I know whether the Government have any particulars regarding the number of liquor permits issued to women in our State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Just now I do not have those particulars with me. If the hon. Member is so much interested in getting those particulars, he may put a separate question and I will answer it.

SRI J. MATHA GOWDER : இதர மாகாணங்களிலிருந்து நீலகிரிக்கு வருகிறவர்களுக்கு கலெக்டர் மூலமாக மது பர்மிட் கொடுப்பதாக பத்திரிகையிலே படித்தேன். இது உண்மையா ? இதன் நோக்கம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது வெளியிலே இருந்து வருகிற யாத்திரிகர்களுக்கு இந்த விஷயத்தில் தடை இருக்கக் கூடாது என்றால் இது அரசாங்கத்தின் அடிப்படையான கொள்கைக்கும், விதிகளுக்கும் முரண்பாடாக இல்லாமல் இருந்தால் அந்த அளவிற்கு இது தளர்த்தப்பட்டு வருகிறது.

SRI K. ANBAZHAGAN : உயர்ந்த வகையான, விலை 9 a.m.
அதிகமான சாராயங்களுக்கு மட்டும் இப்பொழுது விதிவிலக்கு தரப்படுகிறது. பெர்மிட் தரப்படுகிறது. கள்ளும் அதேபோல் இதை விட நல்ல முறையில் மருந்து வகையில் பயன்படுவதால் கள்ளுக்கும் இதே பர்மிட் கொடுக்க வழிவகை செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதற்கு, வைத்தியர்கள் சர்டிபிக்கேட் கொடுத்தால் என்ன செய்யலாம் என்பதுபற்றி யோசிக்கலாம். வைத்தியர்கள் குடிப்பதற்கு என்று சர்டிபிக்கேட் கொடுப்பதில்லை. உடல் நிலையையொட்டி கொடுக்கிறார்கள். அதேபோல் உடல் நலத்திற்காக கள் வேண்டும் என்று வைத்தியர்களை நாடி அவர்கள் அதற்கு சர்டிபிக்கேட் கொடுப்பார்களானால் பின்னால் அது பற்றி யோசனை செய்யலாம்.

SRI S. M. ANNAMALAI : யாத்திரிகர்களாக வருபவர்களுக்கு மதுரை மாவட்டத்திலும், நீலகிரி மாவட்டத்திலும் டாக்டர் சர்டிபிக்கட் இல்லாமலே மது பானங்கள் பெர்மிட் வழங்கலாம் என்று சொல்லப்

[23rd March 1961

பட்டிருக்கிறது. அப்படியானால் பிற நாடுகளிலிருந்து வருகிற யாத்திரிகர்களுக்கு மட்டுமா அல்லது நமது மாநிலத்திலிருந்தே அங்கு யாத்திரை செல்பவர்களுக்கும் பெர்மிட் வழங்கினால் நமது கொள்கை அதனால் பாதிக்கப்படாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வெளிநாடுகளிலிருந்து வருகிறவர்கள் குடிப்பழக்கம் உள்ளவர்களாயிருந்தால் அவர்களுக்கு தொந்தரவு இருக்கக்கூடாது என்றுதான் இந்தஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன், இரண்டு நாட்களுக்கு முன்பு அமெரிக்காவிலிருந்து வந்த ஒரு யாத்திரிகர் என்னிடம் சொன்னார், அமெரிக்காவில் எல்லோருமே குடிப்பதில்லை, ஆகவே அங்கிருந்து வருகிறவர்களுக்கு, குடிப்பழக்கம் உள்ளவர்களுக்கு, பெர்மிட் கொடுப்பதை கவனித்து பார்க்கவேண்டுமென்று சொன்னார். பல பேர்கள் ஆசிரியர்களாக வருகிறார்கள். அவர்களால் அதிகம் செலவு செய்யமுடியாது, ஆகவே வெளிநாடுகளிலிருந்து வருகிற யாத்திரிகர்களுக்கு ஒருவிதத் தொல்லையும் இருக்கக்கூடாதென்றுதான் விதிகள் அப்போதைக்கப்போது தளர்த்தப்படுகிறது.

SRI S. RAMALINGA PADAYACHI : நமது அரசாங்கம் உயர்ந்த கொள்கைகளை கடைப்பிடிக்கும்போது வெளிநாடுகளிலிருந்து வரும் யாத்திரிகர்களுக்கு மட்டும் என் பர்மிட் கொடுக்க வேண்டும், அவர்களுக்கும் தடை இருக்கக்கூடாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நமது கொள்கையை மற்றவர்களிடம் நாம் நிர்ப்பந்தித்து, புகுத்துவது சரியல்ல.

SRI N. R. THIAGARAJAN : விலைக்கு விற்காமல் வீட்டிலேயே சாராயம் காய்ச்சிக் குடிக்க அனுமதித்து விடலாம் என்று ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்கள் கூறினார்களே, இது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : யார் கூறினார்கள் என்று எனக்குத் தெரியாது. கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இதில் அவ்வளவு அக்கரையிருக்குமானால் அதை எடுத்து ஒரு பிரேரபணையாக அரசாங்கத்தினிடம் கொண்டுவந்து சொன்னால் அதைப்பற்றி கவனிக்கலாம், இது வரையில் அப்படி இதைப்பற்றி கவனமே இல்லை.

*"Tamil Nadu" agitation*

* 1028 Q.—SRI A. A. RASHEED :
SRI K. SATTANATHA KARAYALAR : } Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the number of persons arrested in the agitation for renaming the Madras State as Tamil Nadu; and

(b) the number of persons (i) prosecuted and (ii) convicted?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No arrests were made anywhere in the State except in one isolated instance. It appears that in the Nilgiris district six persons were arrested under section 151, Cr.P.C., on the 16th February 1961.

(b) Nil.

SRI A. A. RASHEED : May I know whether these prisoners were treated as political prisoners?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no question of politics in this. As I said in only one case in Nilgiris, six persons were arrested under section 151, Cr.P.C. I do not know whether the case has been concluded.